உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# விநாயகரின் சிறப்பும், வழிபாடும்.





" யானைமுகம் கொண்ட இறைவன்
யாவருக்கும் இவனே தலைவன் "

வெளியீடு :

அருள்நெறித் திருக்கூட்டம்,
தெய்வீகப்பேரவை,
கண்டவராயன்பட்டி.

ஓம்
கணபதயே நம:

# விநாயகரின்
# சிறப்பும், வழிபாடும்.

அன்பளிப்பு:

கா. செ. வேதாந்தமடம்
காளையார் கோவில்

வெளியிட்டவர்:

நா. அருணாசலன்
செயலாளர்
தெய்வீகப்பேரவை
அருள்நெறித் திருக்கூட்டம்
கண்டவராயன்பட்டி

இராட்சச ஆவணி உச
மஹாசதுர்த்தித் திருநாள்

ஓம்
கணபதி துணை

# ஒரு சில வார்த்தைகள்

இன்று விநாயகப் பெருமானின் திருநாள் மஹாசதுர்த்தி. இத்திருநாளை மிகச்சிறப்பாகக் கொண்டாடும் திருக்கோவில் தமிழகத்தில் பிள்ளையார்பட்டி என்ருல் அது மிகையல்ல யாவராலும் ஏற்கக்கூடிய உண்மை! இத்திருநாளில் ஸ்ரீ கற்பகப் பெருமானை வணங்க வரும் பக்தர்களுக்குச் சமய வளர்ச்சி கருதி பக்தர்கள் வழிபாடு செய்ய ஒரு சிறு நூல் அச்சிட்டு வழங்கக் காரையார் கோவில் வேதாந்தமடத்தின் மடாதிபதி திருவருள் திரு. இராமனுத சுவாமிகள் அருள் பாலித்தார்கள்.

நகரத்தார்களின் குருமடங்களில் ஒன்ருகும் காரையார் கோவில் கா. செ. மடம். அம்மடாதிபதி அவர்களின் கட்டளை கிணங்க அம்மடத்தின் அன்பளிப்பாக விநாயகரின் சிறப்பு ஒளவையார் அருளிய அகவல், வேழமுகம் ஆகியவைகளை திரட்டித் தொகுத்து விநாயகரின் சிறப்பும், வழிபாடு என்ற தலைப்புடன் இதனைச் சிறு நூலாக அச்சிட்டு எங்கள் திருக்கூட்டம் பக்தர்களுக்கு வழங்குகின்றதென்பதை மகிழ்ச்சி யுடனும் பணிவன்புடனும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

கண்டவராயன்பட்டி
இராட்சச–ஆவணி–உச
9—9—1975

நா. அருணுசலன்,
செயலாளர்,
அருள்நெறித் திருக்கூட்டம்

உ சிவமயம்
திருச்சிற்றம்பலம்

பிள்ளையார்பட்டி

# ஸ்ரீ கற்பக விநாயகர்



நல்லார் நினைத்த நன்மையை
 நன்றாய் நடத்த விரைகுவான்!
பொல்லார் வகுத்த தீமையைப்
 பூண்டோ டொழித்து மகிழுவான்!
இல்லார் எளியார் வேண்டினால்
 எல்லா வளமும் உதவுவான்!
பல்லார் புகழும் கற்பகப்
 பரமன் நமக்கும் அருளுவான்!

- அருட்கவி கு. செ. இராமசாமி

ஓம்

# விநாயக வணக்கம்

அகரமென அறிவாகி உலக மெங்கும்
அமர்ந்தகர உகரமக ரங்கள் தம்மாற்
பகருமொரு முதலாகி வேறு மாகிப்
பல்வேறு திருமேனி தரித்துக் கொண்டு
புகரில்பொருள் நான்கினையும் இடர்தீர்ந்தெய்தப
போற்றுநருக் கறக்கருணை புரிந்தல்லார்க்கு
நிகரில்மறக் கருணைபுரிந் தாண்டு கொள்ளும்
நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வோம்

# விநாயகரின் சிறப்பு

பிள்ளையார்பட்டியில் திருக்கோவில் கொண்டு யாவராலும் போற்றப்பெறும் தனிப்பெருந்தெய்வம் விநாயகக் கடவுள். ஓங்கார உருவினர். ஏத்துவார் இடர்களையும் எம்பிரான் அடியார்க்கு எளிதில் இன்னருள் புரியும் கருணைக்கடல் ஸ்ரீ கற்பகமூர்த்தி.

## தோற்றம்

திருக்கயிலாயமலையில் மந்திர சித்திர மண்டபத்திற்குப் பார்வதியுடன் பரமேச்சுரர் எழுந்தருளினர். அங்கே ஏழுகோடி மந்திர சித்திரங்கள் பொறிக்கப்பட்டிருந்தன. அவற்றின் நடுவில் சமஷ்டிப் பிரணவம், வியஷ்டிப் பிரணவம் என்ற இரு பிரணவ மந்திரங்கள் இருந்தன. அந்த இரு பிரணவங்களையும் சிவமும் சக்தியும் திருக்கண் சாத்தியருளினர்கள். அந்த இரு பிரணவங்களும் ஒன்றோடொன்று மருவ, அப்பிரணவங்களிலிருந்து, பிரணவாகார யானை முகத்துடன் விநாயகப் பெருமான் அவதரித்தார்.

பிள்ளையார் அம்மையப்பன் அடிமலர்களை வணங்கினுர். செம்மை நிறமுள்ள அக்குழவியை அம்மையப்பர் எடுத்து உச்சி மோந்து உவந்து "உன்னை உள்ளன்புடன் வணங்கினோர்க்கு வரும் இடையூறுகளைக் களைந்து இன்னருள் செய்க" என்று கூறிக் கணங்கட்கெல்லாம் தலைவராக்கி ஆ கூறினுர். ஆதலால் "கணபதி" "கணேசன்" "கணுதிபன்" என்ற திருநாமங்களைப் பெற்ருர்.

## கஜமுகாசுர வதம்

மாகத முனிவருக்கும் விபூதி பெற்ற அசு மாதுக்கும் பிறந்தவன் கஜமுகன். அந்த கஜமுகன் என்ற கொடிய அரக்கன் சிவபெருமானிட எண்ணற்ற வரங்களைப் பெற்று, மாலயனு வானவர்கட்கு எப்போதும் இடுக்கண் புரிந் கொண்டிருந்தான். இந்திரன், பிரமன், திருமா முதலிய அவர்கள் அவன் முன் நின்று காதுகளை கரங்களால் பற்றிக்கொண்டு ஆயிரத்தெட் தோப்புக்கரணம், காலை, உச்சி, மாலை என்ற மூன் நேரங்களிலும் போடவேண்டும் என்று அசுர ஆணை. அவ்வாறு தோப்புக்கரணம் போட்டு போட்டு அயர்ந்து போனுர்கள்.

அசுரனுடைய கொடுமைக்கு அஞ்சிய அரிய ]ஜுதியமரர்கள் திருக்கயிலாயஞ் சென்று மெய் ிலிர்த்து, உரை குழறி, உள்ளம் உருகி, கண்ணீர் ]பருகி, சிவபெருமானைத் துதிசெய்து, "தேவ தேவ! ருணைக் கடலே! கஜமுகனால் அடியேங்கள் அல்லல்படுகின்றோம் காத்தருளும்" என்று கூறி முறையிட்டார்கள்.

சிவபெருமான், விநாயகரைப் பார்த்து, "நீ சென்று கஜமுகனை மாய்த்து, விண்ணவர்க்குத் தண்ணருள் புரிவாயாக" என்று ஆணை யிட்டருளினார்.

விநாயகப் பெருமான், பூதகணங்கள் புடை சூழவும், போர்ப்பறை முழங்கவும் சென்று கஜ முகனுடன் போர்புரிந்தார். அவனுடைய சேனை களைக் கொன்றார். விநாயகர் விடுத்த கணைகள் யாவும் கஜமுகன் மீது பட்டுப் பாறையில் வீழ்ந்த மழைத்துளிபோல் கூர் மழுங்கி ஓய்ந்துவிட்டன.

"இவன் எக்கணையாலும் மாயா வரம் பெற்றவன்" என்று வானொலி கூறியது. விநாயகப் பெருமான் தமது வலக்கொம்பையொடித்துச் சிவ மந்திரத்தை உச்சரித்து ஏவியருளினார். அந்த ஞானமேயான தந்தம் கஜமுகனைப் பிளந்தது;

அவன் மாயாவரம் பெற்றவன் ஆதலின் பெருச்சாளி வடிவுடன் எதிர்த்து வந்தான். விநாயகர் அவன் மீது கருணை மழை பொழிந்தார். அவன் அறியாமை யகன்று, மெய்யறிவு பெற்று விநாயகரிடம் வணங்கி நின்ருன். அந்தப் பெருச்சாளியைத் தமக்கு ஊர்தியாகக் கொண்டருளினர்.

தேவர்கள் மகிழ்ந்து விநாயகரை வணங்கித் துதி செய்தார்கள். விநாயகர், "மாலயனுதி வானவர்களே! உமக்கு என்ன வரம் வேண்டும்? கேளுங்கள்" என்று அருள்புரிந்தார். தேவர்கள், "ஆனைமுக அண்ணலே! நாங்கள் இத்தனை காலம் கஜமுகாசுரன் முன் காலை, உச்சி, மாலை நேரங்களில் ஆயிரத்தெட்டு தோப்புக்கரணங்கள் போட்டோம். இனி தேவரீர் முன் அதனைச் செய்ய அருள் செய்க! என்ருர்கள். விநாயகர், "மூன்று முறை தோப்புக் கரணமிட்டால்போதும்! என்றுகூறி அருள்புரிந்தார். அன்று முதல் அமரர்களும் அடியார்களும் அப் பெருமானுடைய திருமுன் தோப்புக்கரணம் இட்டு வழிபாடு செய்வாராயினர்கள்.

விநாயகரின் திருமுன் தோப்புக்கரணம் இடுவதனல், அறிவு வளர்ச்சியும், உடல் நலமும் உண்டாகி விநாயகருடைய திருவருளுக்கும் உரிய வர்களாக ஆவார்கள்.

குட்டிக்கொள்ளுதல்

முனிவர்களுள் முதல்வராகிய அகத்திய முனிவர் சிவபெருமானிடம் இருந்த காவிரி நதியைக் கமண்டலத்தில் அடக்கிக்கொண்டு தென்திசை நோக்கி வருவாராய், குடகுமலையில் சிவபூசை செய்து கொண்டிருந்தார்.

அப்போது இந்திரன் சீகாழியில் பூசைசெய்து கொண்டிருந்தான். மழையின்றி நந்தவனம் வாடியது.

நாரத முனிவர் இந்திரனைப் பார்த்து "அகத்தியருடைய கமண்டலத்தில் உள்ள காவிரி பெருகுமானால் உன் பூங்கா பொலிவு பெறும்" என்று கூறினார்.

இந்திரன் விநாயகரை வழிபட்டு வேண்டிக் கொண்டான். விநாயகமூர்த்தி காக்கை வடிவுடன் சென்று காவிரியடங்கிய கமண்டலத்தின் மீது அமர்ந்தார். அகத்தியர் காகத்தைக் கரத்தால் ஓட்டினார். காகம் காலால் உந்திப் பறந்தது. கமண்டலம் கவிழ்ந்து காவிரி பெருக்கெடுத்து ஓடியது.

அகத்தியர் காகத்தின்மீது சீறிப்பாய்ந்தார். அது அந்தணச் சிறுவனுகி நின்றது. அச்சிறுவனை இரு கரங்களாலும் குட்டும் பொருட்டு குறுமுனி ஓடினர். பிள்ளையார் அவருக்கு அகப்படாமல் அங்கும் இங்குமாக ஓடினர். அகத்தியர் அச்சிறுவனை யணுகிக் குட்டுதற்கு இருகரங்களையும் ஓங்கினர். ஐங்கரங்களுடன் விநாயகர் காட்சி தந்தருளினர்.

அகத்தியர் திகைத்து நடுநடுங்கினர். "ஓங்காரப் பொருளே! வேத வித்தகனே! உன்னைச் சிறியேன் அறியேனுகிக் குட்டுதற்குக் கையை ஓங்கினேனே? என்னே என் சிறுமதி!" என்று தன் சென்னியிலேயே குட்டிக்கொண்டார். விநாயகர் அவருடைய கரங்களைப் பற்றிக் கருணைபுரிந்தார். "இன்று முதல் நம் திருமுன் பயபக்தியுடன் சென்னியில் குட்டிக் கொண்டோர் கூரிய மதியும் சீரிய நிதியும் பெறுவார்கள்" என்று வரமளித் தருளினர். இதனல் விநாயகரின் திருமுன் அடியார்கள் சிரத்தில் குட்டிக்கொள்ளும் மரபு உண்டாயிற்று.

## திருவுருவ உண்மை

விநாயகர் ஒரு கொம்பு, இரு செவிகள், மூன்று திருக்கண்கள், நான்கு திருத்தோள்கள், ஐந்து

திருக்கரங்கள், ஆறெழுத்துக்கள் உடையவர். அவரை வழிபட்டோர் ஏழு பிறவிகளும் நீங்கி, எண்திசைகளும் புகழ ஒன்பது மணிகளும் பெற்று சம்பத்துடன் வாழ்வார்கள்.

விநாயகருடைய திருமேனி இடையில் கீழே பூத உடம்பு; இடைக்குமேல் கழுத்துவரை தேவ உடம்பு; தலை மிருகத்தலை; ஒரு கொம்பு ஆண் தன்மை; கொம்பில்லாத பகுதி பெண் தன்மை; யானைத்தலை அஃறிணை; தெய்வ சரீரம் உயர்திணை. இவ்வாறு எல்லாம் ஆய திருவுருவம் விநாயகரது வடிவம்.

பூதமாய், தேவராய், விலங்காய், ஆணாய், பெண்ணாய், உயர்த்திணையாய், அஃறிணையாய் எல்லாமாய் விளங்குபவர் விநாயகர்.

யானையை அடக்குங் கருவிகள் பாசமும் அங்குசமும். தன்னையடக்குவார் ஒருவரும் இலர் என்ற குறிப்பை உணர்த்தும் பொருட்டு அவர் தமது திருக்கரங்களில் பாராங்குசத்தை ஏந்தி யிருக்கின்றார்.

விநாயகருடைய செவி தாழ்ந்த செவி; முறம் போன்றது. "சூர்ப்பகர்ணர்." பிறவிப் பெருங்கடலில்

விழ்ந்து ஆழ்ந்து இடர்ப்படும் ஆன்மாக்கள் அவருடைய திருவடியாகிய புணைபற்றியவுடன் முத்திக்கரையில் விரைவில் சேர்ந்து உய்யு பொருட்டுக்காதுகள் காற்று எறிந்து உதவுகின்றன

*மாற்றரிய பிறவியெனும் மறிகடலில் வீழ்ந்தவர்கள்*
*போற்றரிய திருவடியாம் புணை பற்றி நின்றவுடன்*
*சாற்றரிய முத்தியெனுந் தடங்கரையில் உய்ப்பதற்குக்*
*காற்றெறியுந் தழைசெவிய கடக்களிற்றைப் பணிகுவமா*

அகிலவுலகங்களும் அவருடைய மணி வயிற்றி அடங்கிக்கிடப்பன என்ற குறிப்பை அவருடைய மத்தள வயிறு புலப்படுத்துகின்றது.

இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி என் மும் மதங்களைப் பொழிகின்றவர் விநாயகர்.

## ஐந்து திருக்கரங்கள்

கும்பம் ஏந்திய திருக்கரம் ஆக்குந் தொழிலை யும், மோதகம் ஏந்திய திருக்கரம் காத்தல் தொழிலை யும், அங்குசம் ஏந்திய திருக்கரம் அழித்தல் தொழிலையும், பாசம் ஏந்திய திருக்கரம் மறைத்தல் தொழிலையும், தந்தம் ஏந்திய திருக்கரம் அருளல் என்ற தொழிலையும் புரிகின்றன. எனவே விநாயகர்

சிருஷ்டி, திதி, சங்காரம், திரொதாளம், அநுக்கிரகம் என்ற ஐம்பெருந் தொழில்களை ஐந்து திருக் கரங்களால் புரிந்து ஆன்மாக்களுக்கு அருள் புரிகின்றார்.

விநாயகர் தாய்தந்தையரை அன்புடன் வழி பட்டதால் பிள்ளை என்ற பெயருடன் ஆர் என்ற பன்மை விகுதி பெற்றுப் பிள்ளையார் என்று பேர் பெற்றார்.

சில குலங்கட்கு ஆர் விகுதி வரும். முதலி என்னுது முதலியார் என்றும், ரெட்டி யென்னுது ரெட்டியார் என்றும், செட்டி யென்னுது செட்டியார் என்றும் அழைப்பர். பிள்ளை என்ற குலத்தைச் சார்ந்தோர் பிள்ளையார் என்று அழைக்கப் பெறுவதில்லை.

## எளிதில் அருள்புரிபவர்

முருகவேள் திருவுருவம், அம்பிகை திருவுருவம், இராமர், கிருஷ்ணர் முதலிய திருவுருவங்கள் சிற்ப முறைப்படி கரசரணங்கள் அமைத்து சாங்க உபாங்கங்களுடன் செய்து வழிபட வேண்டியவை. சாங்க உபாங்கங்கள் சிற்ப லட்சணத்திற்கு மாறு பட்டிருந்தால் வழிபாடு புரிவோர்க்கு நன்மை

பயக்கமாட்டாது. ஆனால் பிள்ளையார் திருவுருவ அப்படியன்று!

மஞ்சளை அரைத்து ஒரு சிறு குழந்தை கூட பிடித்து வைத்தால் பிள்ளையார். எளிதில் உருவ இல்லாமலே உருட்டி வைத்தால் போதும் பிள்ளையார் அவ்வடிவில் எழுந்தருளியருள்புரிவார் சந்தனம், களிமண், மஞ்சள், சாணம் இப்ப எளிதாகக் கிடைக்கக்கூடிய பொருளி விநாயகரைச் செய்து வழிபடுவார்கள். அவருக் எளிதாகக் கிடைக்கக்கூடிய அறுகம்புல் மி விருப்பம். அறுகு எடுத்து நவிாயகர் அருகு சென்ற வழிபட்டால், பிறவிப் பிணியில் மறுகுந்துயர நீங்கி, இன்பம் பெருகும்.



# ஔவையார் அருளிய

## விநாயகர் அகவல்

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாடப்
பொன்அரை ஞாணும், பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்,
பேழை வயிறும், பெரும்பாரக் கோடும்,
வேழ முகமும், விளங்குசிந் தூரமும்,
அஞ்சு கரமும், அங்குச பாசமும்,
நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்,
நான்ற வாயும் நாலிரு புயமும்,
மூன்று கண்ணும், மும்மதச் சுவடும்,
இரண்டு செவியும், இலங்குபொன் முடியும்,
திரண்ட முப்புரிநூல் திகழொளி மார்பும்,
அற்புதம் நின்ற கற்பகக் களிறே!
முப்பழம் நுகரும் மூஷிக வாகன!
இப்பொழு தென்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தானெழுந் தருளி

மாயாப் பிறவி மயக்க மறுத்தே,
திருந்திய முதல்ஐந் தெழுத்துந் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளந்தனிற் புகுந்து,
குருவடிவாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறம்இது பொருள்என்
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்,
கோடா யுதத்தாற் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டிஎன் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையுங் காட்டி,
ஐம்புலன் தன்னை அடக்கு முபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக் கருளிக்
கருவிக ளொடுங்குங் கருத்தினை யறிவித்து
இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து,
தலமொரு நான்குந் தந்தெனக் கருளி,
மலமொரு மூன்றின் மயக்கம் அறுத்தே,
ஒன்பது வாயில் ஒருமந்திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங் காட்டி
ஆறு தாரத் தங்கிசை நிலையும்
பேறு நிறுத்திப் பேச்சுரை யறுத்தே,
இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்,
கடையிற் சுழுமுனைக் கபாலமுங் காட்டி,

மூன்றுமண் டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக்,
குண்டலி யதனிற் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து,
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலால் எழுப்புங் கருத்தறி வித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி,
இடைச்சக் கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தின் உறுப்பையுங் காட்டிச்,
சண்முக தூலமுஞ் சதுர்முகச் சூக்கமும்
எண்முக மாக இனிதெனக் கருளிப்,
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரியெட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்,
கருத்தினிற் கபால வாயில் காட்டி,
இருத்தி முத்தி இனிதெனக் கருளி,
என்னை அறிவித், தெனக்கருள் செய்து,
முன்னை வினையின் முதலைக் களைந்தே,
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்து
இருள்வெளி யிரண்டிற் கொன்றிட மென்ன

அருள்தரும் ஆனந்தத் தழுத்தி,என் செவியில்
எல்லை இல்லா ஆனந் தமளித்து,
அல்லல் களைந்தே, அருள்வழி காட்டிச்,
சத்தத்தி னுள்ளே சதாசிவம் காட்டிச்,
சித்தத்தி னுள்ளே சிவலிங்கங் காட்டி,
அணுவிற் கணுவாய் அப்பாலுக் கப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி,
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்,
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி,
அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலையறி வித்துத்,
தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக, விரைகழல் சரணே.



# வேழமுகம்



## குறள்—காப்பு

வேழ முகத்து விநாயகனைத் தொழ
வாழ்வு மிகுந்து வரும்.

வெற்றி மிகுத்து வேலவனைத் தொழப்
புத்தி மிகுத்து வரும்.

வெள்ளைக் கொம்பன் விநாயகனைத் தொழத்
துள்ளியோடுந் தொடர்ந்த வினைகளே

அப்ப முப்பழம் அமுதுசெய் தருளிய
தொப்பை யப்பனைத் தொழவினை யறுமே.

சிந்தித் தவர்க்கருள் கணபதி ஜெய ஜெய
சீரிய ஆனைக் கன்றே ஜெய ஜெய
அன்புடை அமரரைக் காப்பாய் ஜெய ஜெய
ஆவித் துணையே கணபதி ஜெய ஜெய
இண்டைச் சடைமுடி இறைவா ஜெய ஜெய
ஈசன் தந்தருள் மகனே ஜெய ஜெய
உன்னிய கருமம் முடிப்பாய் ஜெய ஜெய
ஊர்நவ சந்தி உகந்தாய் ஜெய ஜெய
என்பெரு மா[illegible] இறை[illegible] ஜெய ஜெய
ஏழுல குந்தொழு[illegible] ஜெய ஜெய
ஐயா கணபதி [illegible] ஜெய ஜெய
ஒற்றை மருப்புள[illegible]த் தகா[illegible] ஜெய ஜெய
ஓங்கிய ஆனைக் கன்றே ஜெய ஜெய
ஔவிய மில்லா அருளே ஜெய ஜெய
அஃகர வஸ்து ஆனவா ஜெய ஜெய
கணபதி என்வினை களைவாய் ஜெய ஜெய
ஞயநம் பினர்பா லாடியே ஜெய ஜெய
இடம்பட விக்கின விநாயகா ஜெய ஜெ
இணங்கிய பிள்ளைகள் தலைவா ஜெய ஜெ

ந்த்துவ மறைதரு வித்தகா ஜெய ஜெய
ன்னெறி விக்கின விநாயகா ஜெய ஜெய
ள்ளியி லுறைதரும் பிள்ளையாய் ஜெய ஜெய
ன்று ளாடும் மணியே ஜெய ஜெய
இயங்கிய ஞானக் குன்றே ஜெய ஜெய
அரவக் கிண்கிணி ஆர்ப்பாய் ஜெய ஜெய
இலவக் கொம்பொன் றேந்தியே ஜெய ஜெய
பஞ்சனை பலவுந் தீர்ப்பாய் ஜெய ஜெய
அழகிய வானைக் கன்றே ஜெய ஜெய
இளமத யானை முகத்தாய் ஜெய ஜெய
இரகுபதி விக்கின விநாயகா ஜெய ஜெய

அனந்தலோ டாதியி லடிதொழ வருளே.

பிள்ளையார் சிந்தனை முற்றிற்று.



சிவமயம்

தமிழ்க் கடல், சிவமணி, அமரர்
திரு. ராய. சொ. இயற்றிய

# விநாயக வணக்கம்

## 108 போற்றி

வேழ முகத்து விநாயக போற்றி
பேழை வயிற்றுப் பிள்ளாய் போற்றி
ஏழைக்கு அருள்செய் எம்மான் போற்றி
வாழ வகுக்கும் வள்ளால் போற்றி
சிவனார் பெறுமுதல் செல்வா போற்றி
சேயிழை உமைதரு சிறுவா போற்றி
திருமால் தனக்கு மருகா போற்றி
திருமகள் மகிழுமாப் பிள்ளாய் போற்றி
யானை உரித்தவன் மகனே போற்றி
யானையைக் காத்தவன் மருமான் போற்றி
யானையின் கைபெறு கோனே போற்றி
யானையால் வள்ளியை வென்றாய் போற்றி
யானை மணாளனின் அண்ணா போற்றி
யானை முகத்தனை அழித்தாய் போற்றி
பெருச்சாளி ஏறும் பெரியோய் போற்றி
1.

பேணுவார் பிழைகள் பொறுப்பாய் போற்றி!
வள்ளிதெய் வானை மைத்துன போற்றி!
வல்லபை மங்கை மணாள போற்றி!
கடிமணம் விரும்பாக் கணேச போற்றி!
மடியினில் மாதினை வைத்தாய் போற்றி!
சித்தி புத்தியின் தெய்வமே போற்றி!
முத்தி கொடுக்கும் முதல்வ போற்றி!
மூலை முடுக்கெலாம் முளைத்தாய் போற்றி!
மூவிரு முகத்தோன் முன்னவ போற்றி!
சிதறுகாய் சிறுவருக்கு ஈவாய் போற்றி!
சிவன்தேர் அச்சினைச் சிதைத்தாய் போற்றி!
கொம்புஎழுத் தாணியாக் கொண்டாய் போற்றி!
எம்பிரான் பிறையதில் இணைத்தாய் போற்றி!
மலையினில் பாரதம் வரைந்தாய் போற்றி!
மலைகள் மகிழுமா மணியே போற்றி!
முன்வணக் கங்கொள் முனைவ போற்றி!
பன்னிரு தம்பிகண் எண்ணினை போற்றி!
பின்னவன் முழுமிடப் பிணங்கினை போற்றி!
அன்னையின் அணைப்பால் ஆறினை போற்றி!
எண்ணுவார் இடரைக் களைவாய் போற்றி! 35

எண்ணார் இடர்உற இழைப்பாய் போற்றி!
பரமன் மடியுறை பண்ணவ போற்றி!
பார்வதி ஈன்ற பாலா போற்றி!
அப்பம் அவல்பொறி கப்புவாய் போற்றி!
இப்புவி எல்லாம் இருப்பாய் போற்றி!
ஓங்கா ரப்பொருள் உணர்த்துவாய்போற்றி!
தீங்கெலாம் அகற்றும் செம்மல் போற்றி!
குட்டிக் குனிப்புறக் கொள்வாய் போற்றி!
பட்டி தொட்டிஎலாம்படர்வாய் போற்றி!
குளக்கரை தொறும்குடி கொண்டாய் போற்றி!
அளப்பரும் ஆற்றல்கொள் அம்மான் போற்றி!
அரசின் நிழல்அமர் அரசே போற்றி!
பரசுவார் பவப்பிணி அறுப்பாய் போற்றி!
அறுகினை ஆசையோடு அணிவாய் போற்றி!
உறுபெரு மோதகம் உவப்பாய் போற்றி!
உலகீன்ற கன்னியின் குலமுதல் போற்றி!
நலனெலாம் நம்பர்க்கு அருள்வாய் போற்றி.
மலைபோல் வருதுயர் மாய்ப்பாய் போற்றி.
கலைபோல் கருத்துள் வளர்ப்பாய் போற்றி.
அலகிலா விளையாட்டு அயர்வாய் போற்றி.
5○

உலகெலாம் அடக்கிய உந்தியாய் போற்றி!
மலைமகள் மடிதவழ் மைந்தா போற்றி!
நலம்நுகர் அவர்திறம் நகைப்பாய் போற்றி!
புலவர்க்கு விருந்தாய்ப் பொலிவாய் போற்றி!
கலக லெனச்சிறார்க்கவர்வாய் போற்றி!
பேரொளி பரப்பும் பெருமுடி போற்றி!
பாரதம் எழுதிய ஓர்பிறை போற்றி!
கூருறும் மற்றைக் கொம்பும் போற்றி!
கார்என அருள்பொழி கண்இணை போற்றி!
நான்மறை பகர்ந்தருள் நால்வாய் போற்றி!
வான்குறை கேட்டருள் மாச்செவி போற்றி!
மோதக மணநுகர் மூக்குப் போற்றி!
போதகப் புண்ணியம் பொலிமுகம் போற்றி!
மண்முழுது அடக்கிய வயிறு போற்றி!
கண்அகல் உந்திக் கமலம் போற்றி!
வாரி வழங்கு கை ஐந்தும் போற்றி!
சீரியோர் முடிபடி திருவடி போற்றி!
சிவனார் கோயிலில் திகழ்வாய் போற்றி!
தவமாச் செல்வர்சொல்தவமே போற்றி!
அம்பிகை கோயிலும் அமர்வாய் போற்றி!
75

நம்பினார் துன்பெலாம் நலிவாய் போற்றி!
தம்பி கோயிலும் தங்குவாய் போற்றி!
உம்பரும் போற்றும் ஒருவ போற்றி!
காளி கோயிலும் காப்பாய் போற்றி!
ஊழி தோறும் உலவாய் போற்றி!
பெருமாள் கோயிலும் பிறங்குவாய் போற்றி!
திருமால் தங்கைநற் செல்வா போற்றி!
அடியார் கோயிலும் அமர்வாய் போற்றி.
கடிசேர் அறுகணி கணபதி போற்றி!
தனிப்பெருங் கோயிலும் சார்வாய் போற்றி.
மனிதரைக் கவர்தரு வள்ளால் போற்றி.
எங்கும் இருக்கும் இறைவ போற்றி.
மங்கலம் தொடங்கமுன் வருவாய் போற்றி.
கங்கை அணிந்தவன் கனியே போற்றி.
நங்கை உமைதரு புங்கவ போற்றி.
எளிமையில் அருள்புரி இறைவ போற்றி.
ஏழைகள் பங்கில் இருப்பவ போற்றி
தும்பிக் கை,பெறு தோன்றல் போற்றி
தம்பிக்கு வள்ளியைத் தந்தாய் போற்றி
அறிவு மதம்பொழி ஆனையே போற்றி
9.

| | | | |
|---|---|---|---|
| குறைவிலாப் | பெருங்குணக் | குன்றே | போற்றி! |
| கூத்துடை | யான் தரு | குமரா | போற்றி! |
| கூத்துகந்து | ஆடும் | குரிசில் | போற்றி! |
| சந்திதோறும் | இருக்கும் | தத்துவ | போற்றி! |
| சிந்தையுட் | புகுந்த | தேவா | போற்றி! |
| கணநாத | போற்றி! | கயமுக | போற்றி! |
| விநாயக | போற்றி! | விக்கின | போற்றி! |
| எண்ணிய | ஈவாய் | போற்றி! | போற்றி! |
| புண்ணியப் | பிள்ளையார் | போற்றி! | போற்றி! |

---

108 போற்றி முற்றிற்று.



# தாயினும் சிறந்த தயாளன்...



எம்மதம் ஆயினும் சம்மதம் என்னும்
மெய்ம்மத வாதியின் விரிந்த பார்வையில்
ஒளிமய மாகும் உவப்பே என்போம்!
எவ்வுரு வாக ஏற்கினும் ஆங்கே
அவ்வுரு ஆகும் அழகே என்போம்!
தேனில் வானய் வானில் தேனய்
ஆனய் உன்னை அமுதே என்போம்!
ஆதி விநாயகா! அருமறைத் தலைவா!
வேத முடிவே! வியப்பே! நாங்கள்
ஆயிரம் ஆயிரம் நாமங்கள் ஆர்த்தும்
ஆயிரம் ஆயிரம் வடிவங்கள் அமைத்தும்
போற்றுவோம் உன்னை! புகழ்வோம் உன்னை
நீயே தேவன்! நீயே தலைவன்!
தாயினும் சிறந்த தயாளன் நீயே!
அண்டம் பிண்டம் அனைத்தும் ஆகி
இலங்கும் பொருளே, யாண்டும்
நலங்கள் பெருக உளங்கொள் வாயே!

- அருட்கவி. கு. செ. இராமசாமி

# கவலையை நீக்கும் கற்பகப்பெருமான்

என்ன கவலை எழுந்தாலும் உன்னிடத்தில்
சொன்னால் அவைஉடனே தூள்தூளாய்ப்
போகாவோ !
சின்ன மனிதனுக்கும் தேவநிலை தந்தருளும்
மன்ன எமையாளும் வல்ல கணபதியே !

முன்னும் வினைமுடிக்க முன்னே நடக்கும் உன்னை
உன்னும் அடியார் உலகத்தில் தோற்பதுண்டோ ?
மன்னும் கவிவாணர் வாக்கில் நடம்புரிந்து
பன்னும் தமிழைப் பகரும் கணபதியே !

நன்று சிறக்க நயனம் திறக்கும்உன்னை
நின்று தொழுவார் நிலத்தில் விழுவதுண்டோ ?
இன்று தொழவந்தோம் – என்றும்உனையே
தொழுவோம்
வென்று சிறக்க விளம்பாய் கணபதியே !

– அருட்கவி. கு. செ. இராமசாமி.

ஓம்
சிவ. சிவ.

# இறைவனை தரிசிப்பதால் ஏற்படும் நன்மைகள் என்ன?

| | | |
|---|---|---|
| பருவ | மழை | பொழியும் |
| பயிர் | கள் | செழிக்கும் |
| விளை | பொருள் | விளையும் |
| விலை | வாசிகள் | குறையும் |
| பசிப் | பிணிகள் | நீங்கும் |
| பண் | பாடு | பெருகும் |
| சச் | சரவு | நீங்கும் |
| சமா | தானம் | ஓங்கும் |
| மனக் | கவலை | மாறும் |
| மனச் | சாந்தி | கிடைக்கும் |
| பாவத் | தைப் | போக்கும் |
| பர | கதியில் | சேர்க்கும் |

கண்டவராயன்பட்டி
இராட்சச
ஆவணி
உச

திருச்சிற்றம்பலம்
நா. அருணாசலன்
செயலாளர்,
அருள்நெறித் திருக்கூட்டம்

"சிவாயநமவென்று சிந்தித்து இருப்போர்க்கு அபாயம் ஒருநாளும் இல்லை"

வள்ளுவர் அச்சகம், காரைக்குடி. தொலைபேசி: 506.